இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும், தேவதையும் ஸுப்ரமண்ய உருவங்கொண்ட ஸ்ரீ பரமேச்வரன், சந்தஸ்-அனுஷ்டுப்.

த்யானம் :

द्रुतचामीकरप्रख्यं शक्तिपाणिं षडाननम् ।
मयूरवाहनारूढं स्कन्दरूपं शिवं स्मरेत् ॥

(இ-ள்) உருக்கின தங்கம்போல் பிரகாசிப்ப வரும், சக்தி (வேல்) என்ற ஆயுதத்தை கையில் தரித்துக்கொண்டிருப்பவரும், ஆறு முகங்கள் உள்ள வரும், மயில் வாஹனத்தில் வீற்றிருப்பவருமான ஸ்ரீ ஸுப்ரமண்ய உருவங்கொண்ட பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

நூற்றெட்டு தடவை ப்ராணாயாமம் செய்து ஐயாயிரம் தடவை இந்த மந்த்ரத்தை ஜபம் செய்தால் ஸித்தி ஏற்படும்.

இந்த மந்த்ரஜபத்தால் நல்ல குழந்தைகள், புஷ்டி, ஆரோக்யம், ஐச்வர்யம் இவையெல்லாம் ஸித்திக்கும். (2)

इमा॒ँ रु॒द्राय॑ त॒वसे॑ कप॒र्दिने॑ क्ष॒यद्वी॑राय॒ प्रभ॑रामहे म॒तिम् ।
यथा॑ नः॒ शमस॑द्द्वि॒पदे॒ चतु॑ष्पदे॒ विश्वं॑ पु॒ष्टं ग्रामे॑
अ॒स्मिन्न॑नातु॒रम् ॥ ३

(ப-ரை) तवसे - பலமுள்ளவரும், कपर्दिने - ஜடா தாரியாயும், क्षयद्वीराय - கண்டவுடனேயே நாசமடை கின்ற எதிரிகளையுடையவரும், रुद्राय - ஸம்ஸார துக்கத்தை நிவ்ருத்தி செய்கின்றவருமான பரமேச் வரனின்பொருட்டு, इमां मतिं - மானஸிகமான த்யா னம், பூஜை இவற்றை, प्रभरामहे - விசேஷமாகச்

செய்கின்றோம். यथा - எந்தப்பிரகாரமாகச் செய்தால், नः - எங்களைச் சேர்ந்த, द्विपदे - இரண்டுகால் பிராணிகளுக்கும், चतुष्पदे - நான்குகால் பிராணிகளுக்கும், शं - ஸுகம், असत् - உண்டாகுமோ, अस्मिन् ग्रामे - (நாங்கள் வசிக்கும்) இந்தக்கிராமத்தில் உள்ள, विश्वं - எல்லாப் பிராணிகளும், पुष्टं - புஷ்டியுள்ளவைகளாயும், (குறை அற்றவைகளாயும்) अनातुरम् - வியாதியற்றவைகளாயும், असत् - இருக்குமோ (அவ்விதம் மானஸிகமாக த்யானம், பூஜை இவற்றைச் செய்கின்றோம்.)

(க–ரை) இங்கு தன்னைச் சேர்ந்த மனிதவர்க்கங்களும், மிருகவர்க்கங்களும் ஸுகமாக இருப்பதுடன், தன் கிராமத்தில் உள்ள பிராணிகள் அனைவரும் ஸுகமாக இருப்பதற்காக ஸ்ரீபரமேச்வரனை மனதில் போற்றுகின்றோம் எனக் கூறப்படுகின்றது. கிராமத்திலோ நகரத்திலோ ஒருவன் ருத்ரபாராயணம் செய்து வருவானேயாகில் அங்குள்ள அனைவருக்கும் வியாதியோ, வறுமையோ, திருடர்களுடைய உபாதையோ உண்டாகாது என அடியிற் கண்ட புராண வசனத்திலிருந்து தெரியவருகிறது.

रुद्राध्यायी वसेद्यत्र ग्रामे वा नगरेपि वा ।
व्याधिदुर्भिक्षचोरादिबाधा तत्र न जायते ॥

ஸமஸ்த பிராணிகளுக்கும் ஸமஸ்த ஸுகங்களையும் அளிக்கும் திறமையுள்ளவர் ஸ்ரீ பரமேச்வரன் என்பதை ருத்ராய, தவஸே முதலிய நான்கு விசேஷணங்கள் தெரிவிக்கின்றன.

रुद्राय - ஜனனம், மரணம் என்னும் ஸம்ஸார துக்கத்தையே நிவிருத்தி செய்கின்றவருக்கு வாழ்

நாளில் ஏற்படும் சில துன்பங்களை நிவிருத்தி செய்வதில் சிரமமுண்டோ!

तवसे - அதற்கேற்ற பலமுள்ளவர் என்று பட்ட பாஸ்கரஸாயணபாஷ்யங்களில் வியாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. அபிநவசங்கரபாஷ்யத்தில் तपसे- என்ற பாடத்தை வைத்துக்கொண்டு "ஞான சக்தியுடன் கூடியவர்" என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. कपर्दिने - மற்ற எவராலும் செய்யமுடியாத காரியங்களைச்செய்து முடிக்கின்றார் என்பது இச்சொல்லிலிருந்து கிடைக்கின்றது. कं - गङ्गाजलं - पर्दयति - पालयतीति - कपर्दः - जटाजूटः : सः अस्यास्तीति - कपर्दी. வேறுயாராலும் தாங்கமுடியாத, ஆகாயத்திலிருந்து விழுந்த கங்காப்ரவாஹத்தை பரமேச்வரன் ஒருவனே சிரஸில் தாங்கி ஜடைகளால் அதை கிரஹித்தார்.

क्षयद्वीराय - என்பதால் நிகரற்ற வீர்யமுள்ளவர் என்பது கிடைக்கின்றது.

இவ்வளவு மஹிமைகளுடன் கூடிய பரமேச்வரனிடம் அனைவருக்கும் ஸுகம் ஏற்படவேண்டும் என்று வேண்டிக்கொள்வது மிகவும் பொருத்தமானதே. (3)

मृडानो रुद्रोत नो मयस्कृधि क्षयद्वीराय नमसा विधेम ते
यच्छं च योश्च मनुरायजे पिता तदश्याम तव रुद्र प्रणीतौ ॥ ४

(ப-ரை) रुद्र - ஏ பரமேச்வர! नः - எங்களை, मृड - வேண்டியவற்றை அளித்து இவ்வுலகில் ஸுகமாக இருக்கும்படி செய்யுங்கள். उत - மேலும், नः - எங்களுக்கு, मयः - மோக்ஷஸுகத்தை, कृधि - அளியுங்

கள். क्षयद्वीराय - மிகவும் வீர்யமுள்ள எங்கள் பாபத்தை அழித்த, ते - தங்களுக்கு, नमसा विधेम - நமஸ்காரங்களைச்செய்து போற்றுகின்றோம். पिता - எங்களுக்கு தகப்பனைப்போன்ற, मनुः - மனுவான வர், यत् शं च - யாதொரு விஷய ஸுகத்தையும், योश्च - துக்கஸம்பந்தமற்ற மோக்ஷஸுகத்தையும், तव प्रणीतौ - தங்களுடைய அருள் ஏற்பட்டகாலத்தில், आयजे - ஸம்பாதித்தாரோ, तत् - அதையெல்லாம், रुद्र - ஏ பரமேச்வர! अश्याम - (தங்களுடைய அரு ளால்) நாங்களும் அடைகின்றோம்.

योः - यूयते - दुःखेन विनाभूयते इति योः
दुःखासंभिन्नं सुखं - मोक्ष इत्यर्थः

(க-ரை) ஏ பரமேச்வர! பசு, புத்திரன், தனம், தான்யம் முதலியவற்றை அளித்து இவ்வுலகில் எங்களை ஸுகமாக வாழும்படி செய்யவேண்டும். அத்துடன்மட்டுமில்லாமல், மோக்ஷஸுகத்தையு மளிக்கவேண்டும். "பாபங்களைச் செய்த இவர் களுக்கு மோக்ஷத்தை எப்படி அளிக்கமுடியும்" என்று ஆலோசிக்கவேண்டாம். நாங்கள் தங்களை வணங்கிப் போற்றுகின்றோம். நாங்கள் செய்த பாபம் எவ்வளவு கொடியதாக இருந்தாலும், தங் களை வணங்கியபின் அது எங்களைவிட்டு அகன்று விடாதோ? க்ஷயத்வீராய - என்பதற்கு, பரமேச்வர னைக் கண்டவுடனேயே விரோதிகள் அழிந்துவிடு கின்றனர் என்று முன்பு பொருள் கூறப்பட்டது. அல்லது அவரை வணங்கியவுடன் மிக வீர்யமுள்ள பாபங்கள் எல்லாம் அழிந்துவிடுகின்றன என்றும் பொருள் கொள்ளலாம். பரமேச்வரனுடைய அரு ளால் ஐஹிக ஆமுஷ்மிக ஸுகங்கள் எல்லாம்

பெறப்படுகின்றன என்பது பரம்பராப்ராப்தமல்லாமல், இன்று நேற்று ஏற்பட்டதல்ல எனக் கூறுகின்றார். ஸமஸ்தப் பிரஜைகளுக்கும் தகப்பனையும், வர்ணாச்ரமதர்மங்களை யெல்லாம் பிரஜைகளுக்கு உபதேசித்தவருமான மனு, பரமேச்வரனுடைய அருளால் எவ்வித ஐஹிக - ஆமுஷ்மிகஸௌகத்தை அடைந்தாரோ, அதையெல்லாம் நாங்களும் அடைய வேண்டும் என வேண்டிக்கொள்ளப்படுகிறது.

மூன்று, நான்கு இவ்விரண்டு ரிக்குகளும் ஒரே மந்த்ரம். இதற்கு ரிஷி - மார்க்கண்டேயர். சந்தஸ் - ஜகதீ. தேவதை - ருத்ரன்.

த்யானம் :

दिव्यसिंहासनासीनं स्तूयमानं महर्षिभिः ।
प्रसन्नवदनं ध्यायेत् सोमं सोमार्धशेखरम् ॥

(இ-ள்) திவ்ய சிங்காசனத்தில் வீற்றிருப்பவரும், மஹரிஷிகளால் துதிக்கப்படுகின்றவரும், மலர்ந்த முகத்துடன் கூடியவரும், அர்த்தசந்திரனை சிரஸில் அணிந்தவருமான பார்வதியுடன் கூடிய பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

பசு, பக்ஷி முதலியவற்றின் நன்மைகளே இதன் முக்கிய பயனும். (4)

मानो महान्तमुतमानो अर्भकं मान उक्षन्तमुत मा न उक्षितम् ।
मानोवधीः पितरं मोत मातरं प्रिया मानस्तनुवो रुद्र रीरिषः ॥

(ப-ரை) रुद्र - ஏ பரமேச்வர! नः - எங்களைச் சேர்ந்த, महान्तं - வயதான மனிதரையும், उत - மேலும், नः - எங்களுடைய, अर्भकं - குழந்தைகளையும், नः - எங்களைச்சேர்ந்த, उक्षन्तं - யௌவனப்பருவத்தில் உள்ளவனையும், उत - மேலும், नः - எங்களைச்

சேர்ந்த, उक्षितं - கர்ப்பத்தில் உள்ள சிசுவையும், मा रीरिषः - வியாதி முதலியவற்ருல் ஹிம்ஸிக்காதீர்கள். नः - எங்களுடைய, पितरं - தந்தையை, माऽवधीः - பீடிக்காதீர்கள். उत - மேலும், मातरं - தாயை, माऽवधीः - பீடிக்காதீர்கள். नः - எங்களுடைய, प्रियाः - பிரியமான, तनुवः - உடல்களை, मा रीरिषः - ஹிம்ஸை செய்யாதீர்கள்.

(க-ரை) தன்னைச் சேர்ந்த கிழவர், பாலன், வாலிபன், கர்ப்பத்தில் உள்ள சிசு, தந்தை, தாய் இவர்களை ஹிம்ஸிக்கலாகாது என்பதுடன் தன்னைச் சேர்ந்தவர்களின் கிழவர் முதலியவர்களையும் ஹிம்ஸிக்கலாகாது என வேண்டிக்கொள்வதன்பொருட்டு नः என்று பஹுவசனப் பிரயோகம் செய்யப்பட்டு இருக்கிறது. இந்த மந்த்ரத்தில் मा नः என்று ஒரு தடவை இருந்தாலே அனைவரையும் ஹிம்ஸிக்கலாகாது என்று கிடைக்கக்கூடும். இருந்தாலும் தன்னைச் சேர்ந்தவர்களிடமுள்ள அதிக பிரியத்தால் महान्तं, अर्भकं முதலிய உறவினர்களைக் குறிப்பிடும் எல்லா சொற்களுடனும் मा नः என்று போடப்பட்டிருக்கிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி-பிருகு. சந்தஸ்-ஜகதீ. தேவதை நந்தீச்வர உருவங்கொண்ட ஸ்ரீருத்ரன்.

த்யானம் :

बालेन्दुमकुटं देवं तरुणादित्यविग्रहम् ।
ध्यायेन्नन्दीश्वराकारं गणेश्वरसमावृतम् ॥

(இ-ள்) இளம் பிறையை சிரஸில் அணிந்தவரும், சூரியனைப்போல் பிரகாசிக்கும் உடலையுடையவரும், கணதிபதிகளால் சூழப்பட்டவருமான, நந்தி

தேச்வரன் உருவங்கொண்ட பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரஜபத்தால் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு எல்லாவற்றிலும் அமைதி உண்டாகும். (5)

मानस्तोके तनये मान आयुषि मानो गोषु मानो अश्वेषु रीरिषः
वीरान्मानो रुद्र भामितो वधीर्हविष्मन्तो नमसा विधेम ते ॥ ६

(ப-ரை) रुद्र - ஏ பரமேச்வர! भामितः - (செய்ய வேண்டியவற்றைச் செய்யாத எங்களிடம்) கோபங்கொண்ட தாங்கள், नः - எங்களுடைய, तोके - குழந்தைகளிடமும், तनये - பிள்ளைகளிடமும், मारीरिषः - எவ்வித ஹிம்ஸையையும் செய்யாதீர்கள். नः - எங்களுடைய, आयुषि - ஆயுள் விஷயத்திலும், मारीरिषः - ஹிம்ஸை செய்யாதீர்கள். नः - எங்களுடைய, गोषु - பசுக்கள் விஷயத்திலும், (मारीरिषः) नः अश्वेषु - எங்கள் குதிரைகள் விஷயத்திலும், (मारीरिषः) नः - எங்களுடைய, वीरान् - ஊழியர்களை, मावधीः - ஹிம்ஸிக்காதீர்கள். हविष्मन्तः - சரு, புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸுடன், அல்லது பக்தியுடன் அளிக்கப்படும் வஸ்துவுடன் கூடியவர்களாக இருந்துகொண்டு, ते - தங்களுக்கு, नमसा - நமஸ்காரம் செய்து, विधेम - பணிவிடை செய்கின்றோம்.

(க-ரை) ஏ பரமேச்வர! நாங்கள் எவ்வளவு குற்றம் செய்திருந்தபோதிலும், பக்தியுடன் நாங்கள் அளிக்கும் சரு, புரோடாசம் முதலியவற்றையும், மற்ற வஸ்துவையும் ஏற்றுக்கொண்டு, நாங்கள் செய்யும் நமஸ்காரம், மற்ற பணிவிடைகள் முதலியவற்றால் திருப்தியடைந்து எங்களை மன்னித்து எங்

களைச் சேர்ந்த யாரையும் ஹிம்ஸிக்காமல் இருக்க வேண்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும், தேவதையும் ஸ்ரீபரமேச்வரனே. சந்தஸ்-ஜகதீ.

த்யானம்:

दधानमेकादशधा विभज्य देहं विशुद्धस्फटिकप्रकाशम् ।
तेजोमयं शूलिनमिन्दुमौलिं विचिन्तयेदत्र सदैव रुद्रम् ॥

(இ-ள்) பதினொருவிதமாக தன் உடலைப் பிரித்துக்கொண்டிருப்பவரும், சுத்தமான ஸ்படிகம்போல் பிரகாசிப்பவரும், ஒளிமயமாய், சூலத்தைக் கையில் தரிப்பவராயும், சந்திரனை சிரஸில் அணிந்துகொண்டும் விளங்கும் ருத்ரனை எப்பொழுதும் த்யானம் செய்யவேண்டும்.

ஆயுள், ராஜ்யம் இவற்றின் விருத்தி, நல்ல மழை, வியவஹாரம், சூதாட்டம், இவற்றில் ஜயம், ஸ்வர்ணலாபம், மஹாபாபநிவிருத்தி, ஸர்வஜன ஜயம் முதலியவை இம்மந்த்ரத்தின் பயனாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. (6)

आरात्ते गोघ्न उत पूरुषघ्ने क्षयद्वीराय सुम्नमस्मे ते अस्तु ।
रक्षा च नो अधि च देव ब्रूह्यथा च नः शर्म यच्छ द्विबर्हाः ॥ ७

(ப-ரை) गोघ्ने - (பாபிகளுடைய) பசுக்களை அழிக்கின்றவரும், उत - மேலும், पूरुषघ्ने - பிள்ளை, பேரன் முதலியவர்களைக் கொல்லுகின்றவரும், क्षयद्वीराय - எல்லா வீரர்களையும் அழிக்கின்றவருமான, ते - தங்களுடைய, सुम्नं - சாந்தஸ்வரூபம், अस्मे - எங்களுக்கு, आरात् - சமீபத்தில், अस्तु - இருக்கட்டும். च - மேலும், नः - எங்களை, रक्ष - காப்பாற்றுங்கள். च - மேலும், देव - ஏ பரமேச்வர! अधिब्रूहि - எங்களுக்காகப்

பரிந்து பேசுங்கள். अथा च - மேலும், द्विबर्हाः - இந்த உலகிலும், மறு உலகிலும் ஸௌகத்தை விருத்தி செய்யக்கூடியவரே! அல்லது ஐஹிக - ஆமுஷ்மிக ஸௌகத்தை அபிவிருத்தி செய்யக்கூடியவரே! नः - எங்களுக்கு, शर्म - விஷயஸௌகத்தையும், மோக்ஷ ஸௌகத்தையும், यच्छ - கொடுங்கள்.

(க-ரை) பரமேச்வரனுக்கு கோரமாயும், சாந்தமாயும், இரு உருவங்கள் உண்டு என்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது. பாபம் செய்கின்றவர்களுக்கு கோரமான உருவத்துடனேயே காக்ஷியளிப்பார். அவர்களுடைய பசுக்கள், 'பிள்ளை, பேரன் முதலியவர்களையும் ஹிம்ஸிப்பார். உலகத்திலுள்ள எல்லா வீரர்களையும் கடைசி காலத்தில் அழிக்கின்ற பரமேச்வரனுக்கு பாபிகளையும், அவர்களைச் சேர்ந்தவர் வர்களையும் ஹிம்ஸித்தல் என்பது ஒரு பெரியகாரியமல்ல. ஆனால் இங்கு, ஏ பரமேச்வர! தங்களுடைய சாந்தமான உருவம் ஒன்றுதான் எப்பொழுதும் எங்கள் சமீபத்தில் இருக்கவேண்டும். கோரமான உருவம் வெகு தூரத்தில் இருக்கட்டும். மேலும், சாந்தமான உருவத்துடன் எங்கள் அருகிலேயே இருந்துகொண்டு எங்களை இரக்ஷிக்கவேண்டும். "பாபியான இவனை எப்படி இரக்ஷிக்கலாம்? என்று தேவர்களோ மற்றவர்களோ கேட்குங்கால், எங்களுக்காகப் பரிந்து பேசவும் வேண்டும். அவ்வளவு மட்டுமா? ஐஹிகஸௌகங்களையெல்லாம் அளித்து மோக்ஷஸௌகத்தையும் கொடுத்தருள வேண்டும்" என வேண்டிக்கொள்ளப்படுகிறது.

ஷஷ்டி விபக்தியின் அர்த்தத்தைக் குறிப்பிடுகின்றன. ते என்பதற்கு இந்த மூன்று சொற்களும் விசேஷணங்கள்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி—அத்ரி. சந்தஸ்—திருஷ்டுப். தேவதை—சம்பு.

த்யானம் :

कुर्वाणं सन्निधौ देव्या देवमानन्दताण्डवम् ।
हुताशनधरं ध्यायेत्तप्तकाञ्चनसन्निभम् ॥

(இ-ள்) தேவியின் ஸன்னிதியில், கையில் அக்னியை வைத்துக்கொண்டு ஆனந்ததாண்டவம் ஆடுகின்றவரும், உருக்கின தங்கம்போல் பிரகாசிப்பவருமான பரமேச்வரனை த்யானம்செய்யவேண்டும்.

இந்த மந்த்ர ஜபத்தால் ஆயுளும், ஐச்வர்யமும் விருத்தி அடையும். (7)

स्तुहि श्रुतं गर्तसदं युवानं मृगं न भीममुपहत्नुमुग्रम् ।
मृडा जरित्रे रुद्रस्तवानो अन्यन्ते अस्मन्निवपन्तु सेनाः ॥ ८

(ப-ரை) (ஏ வாக்கே! அல்லது அந்தராத்மாவே!) श्रुतं - 'பரமேச்வரன்' என்று எங்கும் பிரஸித்தி பெற்றவரும், गर्तसदं - நமது ஹ்ருதயகுகையில் வசிப்பவரும், युवानं - எப்பொழுதும் வாலிபராய் மிகவழகாக இருப்பவரும், उपहत्नुं - துஷ்டர்களை ஸம்ஹாரம் செய்கின்றவரும், मृगं न - சிங்கம்போல், भीमं - பயங்கரராயும், उग्रं - மிக உக்ரராயும் (வேறு யாராலும் ஜயிக்கமுடியாதவராயும்) இருக்கின்ற பரமேச்வரனை, स्तुहि - ஸ்தோத்ரம் செய். रुद्र - ஏ பரமேச்வர! स्तवानः - ஸ்தோத்ரம் செய்யப்பட்ட (தாங்கள்), जरित्रे - அழியக்கூடிய இவ்வுடலில் (இருக்கின்ற எங்களை), मृड - ஸுகமுள்ளவர்களாகச் செய்யுங்

கள். सेनाः - (எங்கள் ஸுகத்தைக் கெடுக்கும்) தங்களுடைய சேனைகள், अस्मत् अन्यं - (எங்களைக்காட்டிலும் வேருன) எங்கள் எதிரிகளை அல்லது எங்களுடைய பாபங்களை, निवपन्तु - அழிக்கட்டும்.

(க-ரை) இது வாகிந்த்ரியத்தையோ அல்லது அந்தராத்மாவையோ குறித்து கூறப்படும் மந்த்ரம்; எங்கும் புகழ் பெற்றவனைத்தான் துதிக்கமுடியும். பரமேச்வரனே எல்லா வேதங்களிலும், உலகங்களிலும் "ஈவரன்" என்று மிகவும் பிரசித்திபெற்றவர் என்பதை "ச்ருதம்" என்ற சொல் குறிப்பிடுகின்றது. அவ்வளவு பிரசித்திபெற்ற மஹானுக்கு நம்முடைய ஸ்தோத்ரம் செவியில் படுமோ? என சந்தேகம் வேண்டாம். ஏனென்ருல் அவர் கர்தஸத:. நம்முடைய ஹ்ருதயகுஹையிலேயே வசிக்கின்றவர். அவர் மிகவும் பெருமை வாய்ந்தவர் என்ற காரணத்தால் மட்டும் அவர் துதிக்கப்படவேண்டியவர் அல்ல. எப்பொழுதும் யௌவனப் பருவத்திலேயே இருந்து கொண்டு மிக அழகிய அற்புதமான உடலுடன் கூடியிருப்பதாலும்கூட துதிக்கத் தகுந்தவர் என்பதை யுவாநம் என்ற சொல் குறிப்பிடுகின்றது. இவ்வாறு விதிக்கப்பட்ட ஸ்தோத்ரத்தைச் செய்யாமலும், மற்ற உரிய தர்மங்களை அநுஷ்டிக்காமலும், ஸ்ரீ பரமேச்வரனுடைய ஆஜ்ஞையை மீறுகின்றவர்களை அவர் நிச்சியமாக ஹிம்ஸிப்பார் என்பது உபஹத்நும்-என்பதன்பொருள். துஷ்டர்களை ஹிம்ஸிக்குங்காலத்தில், யானையின் தலையைப் பிளப்பதற்காகப் பாயும் சிங்கம்போல் மிக பயங்கரமாக இருக்கின்ருர் என்பதை ம்ருகம் ந பீமம் என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. இங்கு "ந" என்ற

சொல் "இவ" என்பதுபோல் உபமானத்தை அர்த்தமாகக்கொண்டது. சிங்கத்தை அடக்கும் சரபம் போல் பரமேச்வரனைவிட பலமுள்ள வேறுஒருவர் இருக்கக்கூடுமோ என்ற சங்கையை நிவிருத்தி செய்வதன்பொருட்டு "உக்ரம்" என்று போடப்பட்டிருக்கிறது. "नवा ओजीयो रुद्र त्वदस्ति" "तमीश्वराणां परमं महेश्वरम्" முதலிய ப்ரமாணவசனங்களிலிருந்து, ஈச்வரர்களுக்கெல்லாம் ஈச்வரனை அவரைவிட அதிகபலமுள்ளவர் வேறு யாருமே இல்லை எனத் தெரியவருகிறது.

இவ்வாறு பரமேச்வரனைத்துதிக்காதவர்களுக்கு ஏற்படும் தீங்கைக் கூறிவிட்டு துதித்தால் விளையும் நன்மைகளை मृडाजरित्रे முதலியவற்றால் வர்ணிக்கிறார். எங்களுடைய துதியைக் கேட்டுத் திருப்தியடைந்த தாங்கள் எங்கள் உடல் அழியக்கூடியதானாலும், வியாதியற்றவர்களாகவும், திருடமான சரீரம் உள்ளவர்களாகவுமிருக்கும்படி அருள்புரிந்து கடைசியில் மோக்ஷ ஸுகத்தையும் அளிக்கவேண்டும். எங்கள் ஸுகத்திற்கு விரோதிகளான தங்கள் சேனைகள் எங்கள் எதிரிகளான பாபங்களை அழிக்கட்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி–வையாக்ரர். சந்தஸ்–த்ருஷ்டுப். தேவதை–ஸ்ரீருத்ரன்.

த்யானம் :

उद्यद्भास्करकोटिप्रकाशमाकाशगं भीमम् ।
भीतिघ्नमभयवरदं ध्यायेत् रुद्रं सुरौघनुतम् ॥

(இ-ள்) உதயகாலத்தில் உள்ள கோடி சூரியன்களுக்குச் சமமாய் பிரகாசிப்பவரும், ஆகாயத்தில் இருப்பவரும், மிகபயங்கரமாக இருப்பவரும், அண்டி

யவர்களின் பயத்தை அழிக்கின்றவரும், அபயஹஸ் தம், வரதஹஸ்தம் இவற்றுடன் கூடியவரும், தேவக் கூட்டங்களால் வணங்கப்படுகின்றவருமான ஸ்ரீருத் ரனை த்யானம் செய்யவேண்டும்.

சத்ருநாசம் இந்த மந்த்ரத்திற்கு முக்கிய பயனும். (8)

परिणो रुद्रस्य हेतिर्वृणक्तु परित्वेषस्य दुर्मतिरघायोः ।
अवस्थिरा मघवद्भ्यस्तनुष्व मीढ्वस्तोकाय तनयाय मृडय ॥ ९

(ப-ரை) रुद्रस्य - பரமேச்வரனுடைய, हेतिः - ஆயுதம், नः - எங்களை, परिवृणक्तु - விட்டுவிலகட்டும் (எங்களை ஒருபொழுதும் அடிக்கவேண்டாம்), अघायोः - (கோபத்திற்கு ஸாதனமாக) பாபத்தை விரும்புகின்றவரும், परि - நான்கு பக்கங்களிலும், त्वेषस्य - கோபத்தால் ஜ்வலிக்கின்றவருமான ருத்ர னுடைய, दुर्मतिः - (ஹிம்ஸிக்கவேண்டுமென்ற) கெட்ட எண்ணம் (எங்களைவிட்டு விலகட்டும்). मीढ्वः - வணங்குகின்றவர்களுக்கு வேண்டியவற்றை யெல் லாம் வர்ஷிக்கும் ஏ பரமேச்வர! (தங்கள் ஆயுதமும், எண்ணமும்) स्थिरा - பழுதற்றது, (வீணாக ஆகாதது) मघवद्भ्यः - துதி, நமஸ்காரம் முதலிய தங்கள் பூஜை யைச் செய்கின்ற எங்களிடம், अवतनुष्व - அந்த ஆயு தத்தை உபஸம்ஹாரம் செய்துகொள்ளுங்கள். (ஹிம்ஸிக்கவேண்டுமென்ற எண்ணத்தை மாற்றிக் கொள்ளுங்கள்.) तोकाय - (பொதுவாக எங்கள்) குழந்தைகளுக்கு, तनयाय - (குறிப்பாக எங்கள்) பிள்ளைகளுக்கு, मृडय - ஸுகத்தையளியுங்கள்.

(க-ரை) பிரஜைகள் செய்யும் பாபத்தால் பரமேச் வரனுக்கு கோபம் ஸம்பவிக்கின்றது. அதனால்

பிரஜைகளை ஹிம்ஸிக்க வேண்டுமென்ற எண்ணம், அதனால் பல துக்கங்களை அளிக்கக்கூடிய தேசம், காலம், புருஷன் முதலிய பல பொருள்கள் பரமேச்வரனுக்கு ஆயுதங்களாக ஆகின்றன. அவற்றால் பிரஜைகளுக்கு ஹிம்ஸை, அதனால் துக்காநுபவம் என்பது கிரமம். இந்த மந்த்ரத்தால் பாபம் முதல் துக்காநுபவம் வரை எதுவும் எங்களுக்கு இருக்கலாகாது என்று பிரார்த்திக்கப்படுகிறது. நாங்கள் முன்பு பாபம் செய்திருந்தபோதிலும் இப்பொழுது எங்கள் ஸ்தோத்ரம், நமஸ்காரம் முதலியவற்றால் திருப்தியடைந்து, எங்கள் விஷயத்தில் உங்கள் ஆயுதங்களை உபஸம்ஹாரம் செய்துகொள்ளவேண்டும். எங்களை ஹிம்ஸிக்கவேண்டுமென்ற எண்ணத்தையும் மாற்றிக்கொள்ளவேண்டும். மேலும் பொதுவாக எங்கள் குழந்தைகளுக்கும், முக்கியமாக எங்கள் பிள்ளைகளுக்கும் ஸுகத்தை அளிக்க வேண்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும் தேவதையும், பரமேச்வரனே. சந்தஸ்-திருஷ்டுப்.

த்யானம்:

गजचर्मावृततनुं स्फुरत्प्रहरणोज्वलम् ।
सर्वपापहरं ध्यायेद्देवं कुञ्जरभेदिनम् ॥

(இ-ள்) யானைத்தோலை அணிந்தவரும், பிரகாசிக்கும் ஆயுதங்களால் விளங்குகின்றவரும், எல்லா பாபங்களையும் அபஹரிக்கின்றவரும், கஜாஸுரனைப் பிளந்து கொன்றவருமான பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரஜபத்திற்கு ஸத்புத்ரலாபம் முதலியவை முக்கிய பயனும். (9)

मीढुष्टम शिवतम शिवो नः सुमना भव ।
परमे वृक्ष आयुधं निधाय कृत्तिं वसान
आचर पिनाकं बिभ्रदागहि ॥ १०

(ப-ரை) मीढुष्टम - (வணங்குகின்றவர்களுக்கு) வேண்டியவற்றை யெல்லாம் அளிக்கின்றவரே! शिवतम! - மங்களங்களை அளிக்கின்றவரே! नः - எங்களுக்கு. शिवः - மங்களங்களை அளிக்கின்றவராயும், सुमनाः - நல்ல எண்ணங்களுடன் கூடியவராகவும், भव - இருங்கள். परमे - மிகவும் உயர்ந்த, वृक्षे - (கைலாஸத்தில் உள்ள) ஆலமரத்தில், आयुधं - (தங்களுடைய பயங்கரமான) ஆயுதத்தை, निधाय - வைத்துவிட்டு, कृत्तिं - புலித்தோலை, वसानः - அணிந்துகொண்டு, आचर - எங்களை நோக்கி வாருங்கள். पिनाकं - வில்லைமட்டும், बिभ्रत् - அலங்காரமாக தரித்துக்கொண்டு, (எங்கள் சமீபத்தில் வாருங்கள்.)

(க-ரை) வணங்குகின்றவர்களுக்கு இஷ்டங்களை யெல்லாம் அளிக்கும் ஏ பரமேச்வர! தாங்கள் எங்களுக்கு மங்களங்களை அளிப்பவராகவும் எங்களிடம் நல்ல எண்ணங்களுடன் கூடியவராகவும், பிரீதியுள்ளவராகவும் இருக்கவேண்டும். அவ்வாறு தாங்கள் இருப்பதற்கு அடையாளமாகத் தங்களிடமுள்ள பயங்கரமான ஆயுதங்களை யெல்லாம் எங்கள் கண்ணில்படாதபடி கைலாஸத்தில் உள்ள உயர்ந்த ஆலமரத்தில் வைத்துவிட்டு, புலித்தோலை அணிந்துகொண்டு, அலங்காரமாக வில்லை மட்டும் கையில் வைத்துக்கொண்டு எங்கள் முன் காட்சியளிக்க வேண்டும்.

கைலாஸத்தில் நூறுயோஜனை உயரமுள்ளதும் நூற்று எழுபத்தைந்து யோஜனை அகலமுள்ளது மான ஆலமரத்தில் ஸ்ரீ பரமேச்வரன் வீற்றிருக்கின்றார் என்றும், முமுக்ஷுக்களுக்கு அந்த ஆலமரம் தான் சரணமாக இருக்கின்றது என்றும், வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அதில் ஆயுதங்களை வைத்துவிட்டு வரவேண்டுமென்று இங்கு வேண்டிக்கொள்ளப்படு கிறது. "பிநாகஹஸ்த: க்ருத்திவாஸா:", "ப்ராணேச்வர: க்ருத்திவாஸா: பிநாகீ" முதலிய ச்ருதிகளில் "பிநாகம்" என்ற வில்லுடனும், புலித்தோலுடனும்கூடிய பரமேச்வரனுடைய உருவமே பல ச்ரேயஸ்ஸுகளை அளிக்கக்கூடியதாகப் புகழப்பட்டிருக்கின்றபடியால், அவ்வித உருவத்துடன் காக்ஷியளிக்கவேண்டு மென்று இங்கு கோரப்படுகிறது.

பரமேச்வரன் புலித்தோலை அணிவதென்பது வேறு சிறந்த வஸ்திரம் கிடைக்காதகாரணத்தால் அல்ல. பிருஹ்மா, இந்திரன் முதலிய அனைவருக்கும் ஸமஸ்த ஐச்வர்யங்களையும் அளிக்கும் பரமேச்வரனுக்கு, அவர் உடுத்திக்கொள்ள வஸ்திரம் கிடைக்கவில்லை என்பது பொருந்துமா? பின் ஏன் புலித்தோலை அணிந்துகொள்கிறார்? என்றால் பரமேச்வரன் ஆத்மானந்தத்தையே அனுபவித்துக் கொண்டிருக்கிறார். வேறு விஷயஸுகத்தில் சற்றேனும் பற்றற்றவர். ஆதலால் விஷய ஸுகத்தில் பற்றுள்ளவர்கள் அணிந்துக்கொள்ளக்கூடியசிறந்த வஸ்திரங்களையெல்லாம் தள்ளிவிட்டு அதற்கு பதிலாக தோலையணிந்துகொள்ளுகிறார். ஆதலால் பரமேச்வரனுக்கு புலித்தோலில்தான் பிரியமதிகம். ஆகவே அதை அணிந்துகொண்டு எங்கள்முன் வர வேண்டுமென்று வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி—வைராஜர். சந்தஸ்—திருஷ்டுப். தேவதை—சம்பு.

த்யானம் :

मङ्गलायतनं देवं युवानमतिसुन्दरम् ।
ध्यायेद्वनचराकारमागच्छन्तं पिनाकिनम् ॥

(இ-ள்) மிக அழகிய உருவத்துடன்கூடியவரும் வேடன் போன்ற உருவமுள்ளவரும், 'பிநாகம்' என்ற வில்லை கையில் தரித்துக்கொண்டிருப்பவரும், மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமாயும், வாலிபப் பருவத்தில் உள்ளவருமான ஸ்ரீ பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரஜபத்தால் இராஜபயம், திருடர்களுடைய உபத்ரவம், ப்ராணபயம் முதலியவையெல்லாம் விலகும். (10)

विकिरिद विलोहित नमस्ते अस्तु भगवः ।
यास्ते सहस्रँ हेतयोन्यमस्मन्निवपन्तु ताः ॥ ११

(ப-ரை) विकिरिद - பலவிதமாக ஹிம்ஸிக்கின்ற பாபம், ரோகம், வறுமை முதலியவற்றை அழிக்கின்றவரே! विलोहित - வெளுப்பு நிறமுடையவரே! भगवः - ஐச்வர்யம் முதலிய ஆறுவித குணங்கள் நிரம்பியவரே! ते தங்களுக்கு, नमः अस्तु - நமஸ்காரம் இருக்கட்டும். ते - தங்களுடைய, याः - எந்த, सहस्रं हेतयः - ஆயிரக்கணக்கான ஆயுதங்கள் இருக்கின்றனவோ, ताः - அவைகள், अस्मत् अन्यं - எங்களுக்கு விரோதியான பாபத்தை, निवपन्तु - அழிக்கட்டும்.

விலோஹித என்ற சொல், வெளுப்புநிறமுள்ளவர், சிவப்பு நிறமுள்ளவர் என இருவித பொருள்களையுமுடையது. பரமேச்வரன் சில ஸந்தர்ப்பங்களில்

சிவப்பாயும், சில ஸந்தர்ப்பங்களில் வெளுப்பாயும் இருப்பதாக வர்ணிக்கப்படுகின்றபடியால் இங்கு இருவிதபொருள்களும் பொருந்தும். பாபத்தால் ரோகம், வறுமை முதலிய பலவித துன்பங்களும் ஸம்பவிக்கக்கூடுமாதலால் அதை பரமேச்வரன் அவரது ஆயிரக்கணக்கான ஆயுதங்களால் அழித்து விடவேண்டுமென்று வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி-புலஸ்த்யர். சந்தஸ்-திருஷ்டுப். தேவதை-சம்பு.

த்யானம்:

प्रसन्नवदनं शान्तं चरितोद्वाहमण्डनम् ।
अम्बया सहितं ध्यायेत्सुरसङ्घैरभिष्टुतम् ॥

(இ-ள்) மலர்ந்த முகத்துடன் விளங்குகின்றவரும், விவாஹவேஷம் பூண்டவரும், தேவக்கூட்டங்களால் போற்றப்பட்டவரும், சாந்தவடிவம்கொண்டவருமான ஸ்ரீ பரமேச்வரனை த்யானம் செய்ய வேண்டும்.

பொதுஜனங்களுடைய ஒற்றுமை, சத்ருஜயம், பயநிவிருத்தி முதலியவை இந்த மந்த்ரஜபத்தின் பயனாகக் கூறப்பட்டிருக்கின்றன. (11)

सहस्राणि सहस्रधा बाहुवोस्तव हेतयः ।
तासामीशानो भगवः पराचीना मुखाकृधि ॥ १२

(ப-ரை) भगवः - பகவானே! तव - தங்களுடைய, बाहुवोः - இரு கைகளிலும், सहस्राणि - ஆயிரக்கணக்கான, हेतयः - ஆயுதங்கள், सहस्रधा - பலவிதங்களாக இருக்கின்றன. ईशानः - எல்லாவற்றையும் செய்ய சக்தியுள்ள தாங்கள், तासां - அந்த ஆயுதங்களுடைய, मुखा - நுனிகளை, पराचीना - எங்களுக்கு எதி

ராக இல்லாமல் திரும்பி இருப்பவைகளாக, க்ருபை செய்யுங்கள்.

(க-ரை) பரமேச்வரனுடைய கையில் ஆயிரக் கணக்கான ஆயுதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆயுதமும் பலவிதமாக இருக்கின்றது. இதைக் குறிப்பிடவே ஸஹஸ்ராணி, ஸஹஸ்ரதா என இரு பதங்கள் போடப்பட்டிருக்கின்றன. அவ்வளவு ஆயுதங்களும் எங்களை நோக்கி வராமல் இருக்கும்படி செய்ய வேண்டும்என இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி-நாரதர். தேவதை-ஸ்ரீருத்ரன். சந்தஸ்-அனுஷ்டுப்.

த்யானம் :

सर्वपापहरं देवं सर्वाभरणभूषितम् ।
सर्वायुधधरं ध्यायेत्सर्वलोकमहेश्वरम् ॥

(இ-ள்) எல்லா பாபங்களையும் அழிக்கின்றவரும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவரும், எல்லா ஆயுதங்களையும் தரித்துக்கொண்டிருப்பவரும், எல்லா உலகங்களுக்கும் ஈச்வரனுமான தேவனை த்யானம் செய்யவேண்டும்.

தெய்வாதீனமாக ஏற்படும் உபத்ரவங்கள் இந்த மந்த்ரஜபத்தால் நீங்கும். (12)

பத்தாவது அனுவாகம் முற்றிற்று.

---

## பதினொன்றாவது அனுவாகம்

सहस्राणि सहस्रशो ये रुद्रा अधिभूम्याम् ।
तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि ॥ १

(ப-ரை) सहस्राणि - ஆயிரக்கணக்கான, ये रुद्राः - எந்த ருத்ரர்கள், सहस्रशः - ஆயிரம் ஆயிரமாக, भूम्यां अधि - பூமிக்கு அதிபதிகளாக (இருக்கின்றனரோ), तेषां - அவர்களுடைய, धन्वानि - வில்லுகளை, (ஸ்துதி, நமஸ்காரம் முதலியவற்ருல்) सहस्रयोजने - ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் வெகுதூரத்தில், अवतन्मसि - அவிழ்க்கப்பட்ட நாண்கயிற்றையுடையவைகளாகச் செய்கின்ருேம்.

(க-ரை) பத்தாவது அனுவாகத்தில் ஸ்ரீபரமேச்வரன் வேண்டிக்கொள்ளப்பட்டார். இந்த பதினேருவது அனுவாகத்தில் அவருடைய அம்சங்களான ருத்ரகணங்கள் பிரார்த்திக்கப்படுகின்றனர். ருத்ரகணங்கள், ஆயிரம் ஆயிரம் பேர் அடங்கிய கூட்டங்களாக, உலகத்தில் பலவிடங்களில் ஆங்காங்குள்ள பிராணிகளுடைய கர்மாக்களுக்கேற்றவாறு அவர்களை சிக்ஷிக்கவோ, அல்லது அவர்களுக்கு அருள்புரியவோ பரமேச்வரனுல் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்கள் மிக மகிமை வாய்ந்தவர்கள் என வேதத்திலும், மஹாபாரதம், சைவ புராணம் முதலிய நூல்களிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவர்களை வேண்டிக்கொள்ளுவதற்காகவே இந்த அனுவாகம் ஏற்பட்டுள்ளது.

இதில் மொத்தம் 13 மந்த்ரங்கள். இந்த முதல் மந்த்ரத்தில் பூமிக்கு அதிபதிகளான ருத்ரகணங்கள் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களுடைய வில்லுகள் நாங்கள் இருக்கும் இடத்திலிருந்து ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் இருக்கவேண்டும். அவைகளும் நாண் ஏற்றப்பட்டவைகளாக இருந்தால் எங்களுக்கு பயமுண்டாகக்கூடுமாதலால்,

அவிழ்க்கப்பபட்ட நாண்களுடன் கூடியவைகளாக இருக்கவேண்டும் என்று இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது. (1)

अस्मिन्महत्यर्णवेन्तरिक्षे भवा अधि । २

(ப-ரை) अस्मिन् - இந்த, महति - மிக விசாலமான, अर्णवे - ஸமுத்ரத்திலும், अन्तरिक्षे - ஆகாயத்திலும், अधि - அதிபதிகளாக அவற்றின்மேல், भवाः - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, तेषाँ सहस्रयोजने ऽवधन्वानि तन्मसि - அவர்களுடைய வில்லுகளையும் ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.

இந்த மந்த்ரம் முதல் 9-வது மந்த்ரம் முடிய முதல் மந்த்ரத்தில் உள்ள तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि என்ற பகுதி சேர்த்துக்கொள்ளப்படவேண்டும். இவ்வாறு சேர்த்துக்கொள்ளப்படவேண்டும் என்பதை சூசனம் செய்வதற்காகவே பத்தாவது மந்த்ரத்தில் இப்பகுதி மறுபடியும் படிக்கப்பட்டு இருக்கிறது. ஸமுத்ரமும் ஆகாயமும் அளவிடமுடியாதது. அதுபோல் அவற்றில் இருக்கும் அவற்றின் அதிபதிகளின் மஹிமைகளும் அளவிட முடியாததாம். (2)

नीलग्रीवाः शितिकण्ठाः शर्वा अधः क्षमाचराः । ३

(ப-ரை) नीलग्रीवाः - (காலகூட விஷத்தை புசித்தபின்) கருப்பான கழுத்தையுடையவர்களும். शितिकण्ठा - (அதற்குமுன்) வெளுப்பான கழுத்தையுடையவர்களுமான, शर्वाः - எந்த ருத்ரர்கள், अधः क्षमाचराः - பூமிக்குங் கீழே அதற்கு அதிபதிகளாக சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றனரோ (அவர்களு

டைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.) (3)

नीलग्रीवाः शितिकण्ठा दिवꣳ रुद्रा उपश्रिताः ४

(ப-ரை) दिवं उपश्रिताः - ஸ்வர்க்கத்திற்கு யஜமானர்களாக, அவ்விடத்தில் இருக்கும், नीलग्रीवाः शितिकण्ठाः रुद्राः - கருப்பாயும் வெளுப்பாயுமுள்ள கழுத்தையுடைய எந்த ருத்ரர்கள் உண்டோ (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.)

இவ்வாறு பலவிடங்களில் உள்ள ருத்ரகணங்கள் எல்லாம் ருத்ரஸாருப்யத்தைப் பெற்றவர்களாதலால் ருத்ரனுடைய உருவம் போலவே இவர்களுடைய உருவங்களும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

सहस्राणि सहस्रशः முதல் இதுவரை உள்ள நான்கு ரிக்குகளும் சேர்ந்தது ஒரே மந்த்ரம். இதன் ரிஷி–துர்வாஸர். சந்தஸ்-அனுஷ்டுப். தேவதை–ருத்ரன்.

த்யானம் :

दंष्ट्राकरालवदनं ज्वलज्ज्वलनमूर्धजम् ।
बिभ्राणं त्रिशिखं दीपं ध्यायेत् भुजगभूषणम् ॥

(இ–ள்) கோரமான பற்களுடன் கூடிய முகத்தையுடையவரும், எரியும் நெருப்பு போன்ற சிகையையுடையவரும், மூன்று ஜ்வாலையுள்ள தீபத்தை தரித்துக்கொண்டிருப்பவரும் ஸர்ப்பங்களை ஆபரணமாக அணிந்துகொண்டிருப்பவருமான பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

சத்ருநாசம் இந்த மந்த்ரஜபத்தின் பயனும். (4)

ये वृक्षेषु सस्पिञ्जरा नीलग्रीवा विलोहिताः । ५

(ப-ரை) वृक्षेषु - மரங்களில், सस्पिञ्जराः - இளம் புல் போன்ற நிறத்தையுடையவர்களும், नीलग्रीवाः - கருப்பான கழுத்தையுடையவர்களும், विलोहिताः - மிகவும் சிவப்பாயும், ये - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.)

பூமியில் இருப்பது போல் மரங்களில் அவைகளுக்கு அதிபதிகளாக பலவித நிறங்களுடன்கூடிய ருத்ரர்கள் வசிக்கின்றனர். அவர்களைப் பற்றியது இந்த மந்த்ரம். (5)

ये भूतानामधिपतयो विशिखासः कपर्दिनः ॥ ६

(ப-ரை) भूतानां - பாலக்ரஹம் முதலிய பூத கணங்களுக்கு, अधिपतयः - அதிபதிகளாயும், विशिखासः - தலையில் கேசங்கள் அற்றவர்களாகவும், कपर्दिनः - ஜடையுடன் கூடியவர்களாகவும், ये - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் பட்டவைகளாகச் செய்கின்றோம்.) பூதங்களுக்கு அதிபதிகளான ருத்ரர்களுள் சிலர், தலையில் கேசங்கள் அற்றவர்களாகவும், சிலர் ஜடைகளுடன்கூடியவர்களாகவும் இருக்கின்றனர். (6)

ये अन्नेषु विविध्यन्ति पात्रेषु पिबतो जनान् ॥ ७

(ப-ரை) अन्नेषु - புசிக்கும் உணவுகளில் (மறைவாக) இருக்கும், ये - எந்த ருத்ரர்கள், जनान् - ஜனங்களை, विविध्यन्ति - ஹிம்ஸிக்கின்றனர்களோ (அவ்வாறே), पात्रेषु - குடிக்கப்படும் பால் முதலியவற்றில்

அல்லது குடிப்பதற்கு ஸாதனமான பாத்திரங்களில் (மறைவாக இருக்கும் எந்த ருத்ரர்கள்), पिबतः - குடிக்கும், जनान् - ஜனங்களை (ஹிம்ஸிக்கின்றனரோ, அவர்களுடைய வில்லுகளை ஆயிரம்யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாக இருக்கும்படி செய்கின்றோம்.)

உணவுகளில் மறைவாக இருக்கும் ருத்ரர்கள் உணவுகள் மூலம் பல வியாதிகளை உற்பத்திசெய்து ஜனங்களை ஹிம்ஸிக்கின்றனர்.

ये वृक्षेषु - முதல் இதுவரை மூன்று ரிக்குகளும் சேர்ந்து, ஒரு மந்த்ரம். ரிஷி–சந்தஸ், முதலியவை முன் மந்த்ரம் போலவே. (7)

ये पथां पथिरक्षय ऐलबृदा यव्युधः ॥ ८

(ப–ரை) पथां - வைதிகங்களாயும், லௌகிகங்களாயும் உள்ள ஸமஸ்தமார்க்கங்களுக்கும், पथिरक्षयः - இரக்ஷகர்களாகவும், ऐलबृदः - அந்நத்தை யளித்து போஷிக்கின்றவர்களாயும், यव्युधः - பாபிகளை அழித்து அதன் மூலம் ஸன்மார்க்கங்களை இரக்ஷிக்கின்றவர்களாயுமிருக்கின்ற, ये - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பாற்பட்டவைகளாக இருக்கும்படி செய்கின்றோம்.)

(க–ரை) ஸத்புருஷர்களை லௌகிக வைதிக மார்க்கங்களில் ஈடுபடும்படி செய்து அவற்றின் பயன்களாகிற அந்நம் முதலியவற்றை அவர்களுக்கு அளிப்பதும், பாபிகளை அவற்றில் செல்லாமல் இருக்கும்படி செய்வதுமே, லௌகிக வைதிக மார்க்கங்களை இரக்ஷித்தல் என்பது. இங்கு पथिरक्षयः - என்

ருலே மார்க்கங்களை இரக்ஷிக்கின்றவர்கள் என்று கிடைக்கும். ஆனால் உலகில் எவ்வளவு மார்க்கங் கள் உண்டோ அவை முழுவதையும் இரக்ஷிக்கின்ற வர்கள் என்ற விசேஷார்த்தம் கிடைப்பதன் பொருட்டு पथां என்று தனியாகவும் போடப்பட்டி ருக்கிறது. "वसूयवो वसुपते वसूनाम्" "गवामसि गोपतिरेक इन्द्र" "निधीनां त्वा निधिपतिं हवामहे" முதலிய ஸ்தலங்களில் மேற்கூறியவாறு பொருள் களை உணர்த்துவதற்கென்றே இருதடவை பிரயோ கம் செய்யப்பட்டிருப்பதைக் காணலாம்

ऐलबृदः - इराशब्दः - अन्नवाची. इराणां समूहः - ऐरं, ऐरमेव ऐलं, तत् बिभ्रतीति ऐलभृतः, त एव ऐलबृदाः - भकारस्य बकारः, तकारस्य दत्वं, अकारस्य दीर्घश्च छान्दसः, - अन्नदातारः, इत्यर्थः ऐरभृतः என்ற சொல் பலமாறு தல்களையடைந்து ऐलबृदाः என்று காணப்படுகிறது. இது வேதத்தில் மாத்திரம் காணப்படும். இதுபோல் यव्युधः என்பதும் சாந்தஸமான ரூபந்தான். (8)

ये तीर्थानि प्रचरन्ति सृकावन्तो निषङ्गिणः ॥ ९

(ப-ரை) सृकावन्तः - "ஸ்ருகா" என்ற கூர்மை யான ஆயுதங்களை கையில் தரிப்பவர்களும், निषङ्गिणः - கத்தியை தரித்துக்கொண்டிருப்பவர்களு மான, ये - எந்த ருத்ரர்கள், तीर्थानि - கங்கை முதலிய தீர்த்தங்களில், प्रचरन्ति - ஸஞ்சரித்துக்கொண்டிருக் கின்றனரோ (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் பட்டவைகளாக இருக் கும்படி செய்கின்றோம்) சிலருக்கு தீர்த்த பலத்தை யளிக்கவும், சிலருக்கு அதைத்தடுக்கவும், ஆயுத

பாணிகளாக ருத்ரகணங்கள் தீர்த்தக்கரையில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனர். இம்மந்த்ரம் அவர்களைக் குறிப்பிடுகின்றது.

8, 9 இரண்டு ரிக்குகளும் சேர்ந்து ஒரே மந்த்ரம். இதற்கு ரிஷி—தேவலர். சந்தஸ்—அனுஷ்டுப். தேவதை—ருத்ரன்.

த்யானம்: நான்காவது மந்த்ரத்தில் கூறப்பட்டது போலவே.

இந்த மந்த்ரஜபத்தால் ஸத்புத்ரலாபம் ஸித்திக்கும். (9)

य एतावन्तश्च भूयाँसश्च दिशो रुद्रा वितस्थिरे ।
तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि ॥ १०

(ப—ரை) एतावन्तः - "ஸஹஸ்ராணி ஸஹஸ்ரச:" முதல் இதுவரை, எவ்வளவு ருத்ரர்கள் கூறப்பட்டனரோ, भूयाँश्च - இவர்களைவிட மிக அதிகமாக, கணக்கிடமுடியாத, ये रुद्राः - எந்த ருத்ரர்கள், दिशो वितस्थिरे - எல்லா திக்குகளையும் வியாபித்துக்கொண்டிருக்கின்றனரோ, तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि - அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி—சந்தஸ் முதலியவையெல்லாம் முன் மந்த்ரம் போலவே.

नमो रुद्रेभ्यो ये पृथिव्यां येऽन्तरिक्षे ये दिवि येषामन्नं वातो वर्षमिषवस्तेभ्यो दश प्राचीर्दश दक्षिणा दश प्रतीचीर्दशोदीचीर्दशोर्ध्वास्तेभ्यो नमस्ते नो मृडयन्तु ते यं द्विष्मो यश्च नो द्वेष्टि तं वो जम्भे दधामि ॥ ११

இதை மூன்று மந்த்ரங்களாகப் பிரித்துக் கொள்ளவேண்டும்.

(१) नमो रुद्रेभ्यो ये पृथिव्यां येषामन्नमिषवस्तेभ्यो दशप्राचीर्दश .... .... .... दधामि ।

(२) नमो रुद्रेभ्यो येऽन्तरिक्षे येषां वात इषवस्तेभ्यो दश प्राचीः .... .... .... दधामि ।

(३) नमो रुद्रेभ्यो ये दिवि येषां वर्षमिषवस्तेभ्यो दश प्राचीः .... .... .... दधामि ॥

முதல் மந்த்ரத்தின் பதவுரை:— ये - எந்த ருத்ரர்கள், पृथिव्यां - பூமியில் (இருக்கின்றனரோ), येषां = எவர்களுக்கு, अन्नं - (நாம் உண்ணும்) உணவுப் பொருள்கள், इषवः - அம்புகள்போல் ஹிம்ஸைக்கு ஸாதனமாக இருக்கின்றனவோ, तेभ्यः रुद्रेभ्यः - அந்த ருத்ரர்களின்பொருட்டு, दश - பத்து விரல்களையும், प्राचीः - கிழக்குமுகமாக உள்ளவைகளாகவும், दश दक्षिणाः - பத்துவிரல்களையும் தெற்குமுகமாக உள்ளவைகளாகவும், दश प्रतीचीः - பத்து விரல்களையும் மேற்குமுகமாக உள்ளவைகளாகவும், दशोदीचीः - பத்து விரல்களையும் வடக்குமுகமாக உள்ளவைகளாகவும், दश ऊर्ध्वाः - பத்துவிரல்களையும் மேல்முகமாக இருப்பவைகளாகவும் (செய்கின்றேன்). அந்தந்த திக்குகளை நோக்கிக் கும்பிடுங்காலத்தில் பத்து விரல்களும் அந்தந்த திக்குகளை 'நோக்கி நிற்கும். ஆதலால் அந்தந்த திக்குகளை நோக்கி அஞ்சலி செய்கின்றேன் என்பது பொருள். இதனால் காயிகநமஸ்காரம் கூறப்பட்டது. तेभ्यः नमः - (அந்தந்த ருத்ரர்களின்பொருட்டு நமஸ்காரம்.) இதனால் மானஸிக நமஸ்காரம் கூறப்பட்டது. மந்த்ரத்தின் ஆதியில் உள்ள नमो रुद्रेभ्यः என்பதால் வாசிக நமஸ்

காரம் கூறப்பட்டது. ते - அந்த ருத்ரர்கள், नः - எங்களை, मृडयन्तु - ஸுகமுள்ளவர்களாகச் செய்யட்டும். ते - மூன்று கரணங்களாலும் நமஸ்காரம் செய்த நாங்கள், यं - யாரை, द्विष्मः - வெறுக்கின்றோமோ, यश्च - யார், नः - எங்களை, द्वेष्टि - வெறுக்கின்றானோ, तं - அந்த இருவித மனிதர்களையும், वः - உங்களுடைய, जम्भे - திறந்த வாயில், दधामि - தள்ளிவிடுகின்றோம். (அவர்களை அழித்து எங்களை இரக்ஷிக்க வேண்டும்) என்பது பொருள்.

(க-ரை) अन्नमिषवः பாபிகளை ஹிம்ஸிக்க அவரவர்கள் உண்ணும் உணவை ஆயுதமாக ஸ்ரீருத்ர கணங்கள் உபயோகப்படுத்திக்கொள்ளுகின்றனர். அதாவது அபத்யமான உணவையோ அல்லதுஅதிக உணவையோ உட்கொள்ளும்படி செய்து, அதனால் வியாதிகளை உண்டுபண்ணி பலரை ஹிம்ஸிக்கின்றனர். சிலருக்கு உணவே இல்லாமல் செய்து மிகுந்த பசியைக்கொடுத்து அதன்மூலம் ஹிம்ஸிக்கின்றனர். வேறுசிலரை உணவுக்காகத் திருடும்படிசெய்து அதன்மூலம் தண்டனைக்குள்ளாக்கி ஹிம்ஸிக்கின்றனர். இவ்வாறு பாபிகளை ஹிம்ஸிக்கும் விஷயத்தில் உணவே காரணமாக இருக்கின்றபடியால் அதுவே அம்பு எனக் கூறப்பட்டிருக்கிறது.

இம்மாதிரியாகவே 2வது மந்த்ரத்தில் वात इषवः என்றும், மூன்றாவது மந்த்ரத்தில் वर्षमिषवः என்றும் கூறப்பட்டிருப்பதற்குப் பொருள்களைக்கொள்ள வேண்டும். वात इषवः - காற்றை அம்பாகக் கொண்டவர்கள்.

அதிகமான காற்றை உண்டுபண்ணியோ, அல்லது வாதரோகத்தை உண்டுபண்ணியோ பாபிகளை

ஹிம்ஸிக்கின்றபடியால் காற்றே அம்புகள் எனக் குறிப்பிட்டிருக்கிறது.

वर्षमिषवः மழையை அம்பாகக் கொண்டவர்கள்.

அதிக மழையை அளித்தோ, அல்லது மழையே இல்லாமல் செய்தோ பாபிகளை ஹிம்ஸிக்கின்றபடியால் மழையே அம்புகள் எனக்குறிப்பிடப்பட்டிருக்கிறது.

2-வது மந்த்ரம் :— अन्तरिक्षे - ஆகாயத்தில், ये - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, येषां - எவர்களுக்கு, वातः - காற்று, इषवः - அம்புகளோ, (ஹிம்ஸைக்கு ஸாதனமான ஆயுதங்களோ) அவர்களின் பொருட்டு நமஸ்காரம். மற்றவையெல்லாம் முதல் மந்த்ரம் போலவே.

3-வது மந்த்ரம்:—दिवि - ஸ்வர்கத்தில், ये - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, येषां - எவர்களுக்கு, वर्षं - மழை, इषवः - அம்புகளோ, ( அவர்களின் பொருட்டு நமஸ்காரம்) மற்றவையெல்லாம் முதல் மந்த்ரம் போலவே.

नमो रुद्रेभ्यः முதல் दधामि வரை மூன்று யஜுஸ்ஸுக்களும் சேர்ந்து ஒரே மந்த்ரம், இதற்கு தேவதையும் ரிஷியும் ருத்ரனே. "ஸஹஸ்ராணி ஸஹஸ்ரச"; என்றவிடத்தில் கூறப்பட்ட த்யானத்தையே இதற்கும் த்யானமாகக் கொள்ளவேண்டும். (11),(12),(13)

त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम्
उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय मामृतात् ॥

(ப-ரை) सुगन्धिं - நல்ல வாஸனையையுடையவரும், पुष्टिवर्धनं - எல்லாவற்றிலும் புஷ்டியை அபி

விருத்தி செய்கின்றவரும், त्र्यम्बकं - மூன்று கண்களை யுடையவருமான் ஸ்ரீ ருத்ரனை, यजामहे - போற்று கின்றோம். उर्वारुकं - காம்பிலிருந்து, उर्वारुकमिव - வெள்ளிரிப்பழம் (நழுவி விழுவது) போல், मृत्योः - ஸம்ஸார பந்தத்திலிருந்து, मुक्षीय - விடுதலையடைய வேண்டும், अमृतात् - மோக்ஷத்திலிருந்து, मा - (मुक्षीय) விடுதலையடையவேண்டாம்.

ருத்ராத்யாயத்துடன் இந்த மந்த்ரத்தையும் அடுத்துள்ள சில ரிக்குகளையும் சேர்த்து பாராயணம் செய்வதென்பது ஸம்ப்ரதாயத்திலிருந்து வருகிறது. இவைகளும் ஸ்ரீருத்ரனையே போற்றும் மஹா மந்த்ரங்களாக இருக்கின்றபடியால் ஸ்ரீருத்ரத்துடன் சேர்த்துப் படிக்கப்படுகின்றனபோலும்.

இந்த மந்த்ரத்தின் கருத்து:— திவ்யகந்த: திவ்யரஸ: என்று உபனிஷத் கூறுகின்றபடி ஸ்ரீ பரமேச்வரனது திருமேனியைச் சேர்ந்த வாஸனை, வர்ணம் முதலியவை எல்லாமே மிகச் சிறந்தவைகளாக இருக்கின்றபடியால் सुगन्धि - எனக் கூறப்படுகிறது. மேலும் ஸ்ரீ பரமேச்வரனை அண்டியவர்களுக்கு எல்லா வஸ்துக்களிலும் புஷ்டியை (குறைவற்றிருத்தலை) ஸ்ரீபரமேச்வரன் அபிவிருத்தி செய்கின்றார். அப்படிப்பட்ட பரமேச்வரனைப் போற்றும் நாங்கள், பழுத்த வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து அனுயாசமாக நழுவி விழுவதுபோல், ஸம்ஸார பந்தத்திலிருந்து சிரமமின்றி விடுதலையடையவேண்டும். மோக்ஷத்திலிருந்து அதாவது மோக்ஷஸாதனமான நிவிருத்தி மார்க்கத்திலிருந்து ஒருபொழுதும் நாங்கள் விலகாமல் இருக்கவேண்டும்.

यो रुद्रो अग्नौ यो अप्सु य ओषधीषु यो रुद्रो विश्वा भुवना विवेश तस्मै रुद्राय नमो अस्तु ॥

(ப-ரை) यः रुद्रः - எந்த ருத்ரன், अग्नौ - அக்னியில், विवेश - (எரிக்கும் சக்தியாய்) பிரவேசித்திருக்கின்ருரோ, यः - எந்த ருத்ரன், अप्सु - ஜலங்களில் பிரவேசித்திருக்கின்ருரோ), यः - எந்த ருத்ரன், ओषधीषु - ஓஷதிகளில் (பிரவேசித்திருக்கின்ருரோ), यो रुद्रः - எந்த ருத்ரன், विश्वा भुवना - எல்லா உலகங்களிலும், विवेश - பிரவேசித்திருக்கின்ருரோ, तस्मै रुद्राय - அந்த ருத்ரனின் பொருட்டு, नमः अस्तु - நமஸ்காரம் இருக்கட்டும்.

ஸ்ரீ ருத்ரன் எல்லாவிடங்களிலும் இருப்பதால் அவரை வணங்கினுல் எங்கும் நன்மையைப் பெறலாம் என்று இதனுல் தெரியவருகிறது.

तमुष्टुहि यः स्विषुस्सुधन्वा यो विश्वस्य क्षयति भेषजस्य ।
यक्ष्वामहे सौमनसाय रुद्रं नमोभिर्देवमसुरं दुवस्य ॥

(ப-ரை) यः - எந்த ருத்ரன், स्विषुः - சிறந்த பாணத்தையுடையவரோ, सुधन्वा - நல்ல வில்லேயுமுடையவரோ, यः - எவர், विश्वस्य - எல்லாவிதமான, भेषजस्य - மருந்திற்கும், क्षयति - இருப்பிடமோ, तमु - அந்த ருத்ரனேயே, स्तुहि - ஸ்தோத்திரம் செய். महे - அதிகமான, सौमनसाय - மனதின் சாந்திக்காக, असुरं - மிக்க பலமுள்ளவரும் அல்லது ஆயுளை அபிவிருத்தி செய்கின்றவரும், देवं - மிகவும் பிரகாசமுள்ளவருமான, रुद्रं - ஸ்ரீருத்ரனை, यक्ष्व - பூஜை செய். नमोभिः - நமஸ்காரங்களாலும், दुवस्य - (அவரையே) கௌரவிப்பாயாக.

இங்கு, स्तुहि-यक्ष्व-दुवस्य என்ற மூன்று சொற்களாலும் முறையே, வாக்கினாலும், மனதாலும், உடலாலும் ஸ்ரீ ருத்ரனையே போற்றவேண்டுமென்று கூறப்படுகிறது. ஏனென்றால், அவர் வறுமை, வியாதி, அற்ப ஆயுள் முதலிய எல்லாவற்றையும் நிவிருத்தி செய்யும் எல்லாவித மருந்துகளுக்கும் இருப்பிடமானவர். மேலும் சிறந்த அம்புகளையும் வில்லையும் கையில் வைத்துக்கொண்டு எப்பொழுதும் நம்மை இரக்ஷித்தும் வருகின்றார்.

अयं मे हस्तो भगवानयं मे भगवत्तरः ।
अयं मे विश्वभेषजोयँ शिवाभिमर्शनः ॥

(ப-ரை) मे - என்னுடைய, अयं हस्तः - இந்த கையானது, शिवाभिमर्शनः - மங்களகரமான பரமேச்வர விக்ரஹத்தை ஸ்பரிசிக்கின்றது. (தொட்டு அபிஷேகம், அலங்காரம் முதலியவற்றைச் செய்கின்றது.) ஆதலால், अयं - இந்த கையானது, भगवान् - பாக்யமுள்ளது. मे - என்னுடைய, अयं - இந்த கையானது, भगवत्तरः - மிகவும் பாக்யமுள்ளது. मे - என்னுடைய, अयं - இந்த கை, विश्वभेषजः - எல்லா வியாதிகளையும் நிவிருத்திசெய்யும் மருந்தாகவும் ஆகின்றது. ஸ்ரீ பரமேச்வரனை ஆராதனம் செய்யும் ஹஸ்தம் மிக பாக்யமுள்ளதாயும், ஸமஸ்த வியாதிகளையும் நிவிருத்தி செய்யக்கூடியதாகவும் இருக்கின்றபடியால் அனைவரும் தவறாமல் பரமேச்வரனை ஆராதனம் செய்யவேண்டுமென்பது கருத்து.

ये ते सहस्रमयुतं पाशा मृत्यो मर्त्याय हन्तवे ।
तान् यज्ञस्य मायया सर्वानवयजामहे ॥

(ப-ரை) मृत्यो - காலரூபியான ஏ பரமேச்வர! मर्त्याय - இறக்கும் ப்ராணிவர்க்கங்களை யெல்லாம், हन्तवे - பீடிப்பதற்காக, ते - தங்களுடைய, सहस्रं - ஆயிரக்கணக்காயும், अयुतं - பதினாயிரக்கணக்காயு மிருக்கின்ற, ये - எந்த, पाशाः - கயிறு முதலிய ஹிம்ஸைக்குரிய ஸாதனங்கள் இருக்கின்றனவோ, तान् सर्वान् - அவை எல்லாவற்றையும், यज्ञस्य मायया - நாங்கள் செய்யும் நல்ல காரியங்களுடைய பலத்தினால், अवयजामहे - விலக்கிக்கொள்ளுகிறோம்

ஒருவனுடைய அபமிருத்யுவுக்கு ஸாதனமாக பரமேச்வரனிடம் பல ஆயுதங்கள் இருக்கின்றன அவையெல்லாவற்றையும் ஸத்கர்மாக்களைச் செய்து விலக்கிக்கொள்ளவேண்டும் என்று இதிலிருந்து கிடைக்கின்றது.

मृत्यवे स्वाहा - मृत्यवे स्वाहा ॥

मृत्यवे - ம்ருத்யுரூபியான ஸ்ரீ பரமேச்வரனின் பொருட்டு, स्वाहा - இந்த ஹோமம் செய்யப்படுகின்றது.

ओं नमो भगवते रुद्राय विष्णवे मृत्युर्मे पाहि ॥

(ப-ரை) विष्णवे - எங்கும் வ்யாபித்திருப்பவராயும், भगवते - பூர்ணமான "ஐச்வர்யம்" முதலிய ஆறு குணங்கள் நிரம்பியவராயும், रुद्राय - ஸம்ஸாரதுக்கத்தை விலக்குகின்றவருமான ஸ்ரீபரமேச்வரனுக்கு, नमः - நமஸ்காரம். मृत्युः - ஸம்ஸார பந்தத்திலிருந்து, मे - என்னை, पाहि - இரக்ஷிக்கவேண்டும். வேதமானதால் இங்கு சில விபக்திகள் மாறுபட்டிருக்கின்றன.

प्राणानां ग्रन्थिरसि रुद्रो मा विशान्तकः ।
तेनान्नेनाप्यायस्व ॥

(ப-ரை) रुद्रः - ருத்ரனாகிய தாங்கள், प्राणानां - பிராணன், இந்திரியங்கள் இவைகளின், ग्रन्थिः - முடிச்சு போல், असि - இருக்கின்றீர். अन्तकः - எல்லாவற்றையும் அழிக்கும் தாங்கள், मा विश - என்னிடம் புகுந்து வாசஞ் செய்யுங்கள். तेन - அவ்விதம் செய்வதால், अन्नेन - நான் உண்ணும் உணவினால், आप्यायस्व - தாங்கள் திருப்தியடைந்து என்னையும் இரக்ஷியுங்கள்.

(க-ரை) உடலில் எல்லா புலன்களையும் ஒன்று சேர்த்துதம் தம் வேலையைச் செய்ய இயக்குகின்றவர் ஸ்ரீபரமேச்வரன். இறுதியில் எல்லாவற்றையும் அழிப்பவரும் அவரே. அப்படிப்பட்டவர் நம்மிடம் எப்பொழுதும் குடிகொண்டு நம்மைக் காப்பாற்ற வேண்டும் என வேண்டிக்கொள்ளப்படுகிறது

ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற மூன்றுவித துன்பங்களும் நீங்கி எங்கும் இன்பம் நிலைபெறட்டும்.

ஸ்ரீருத்ரம் முற்றிற்று.

---

# சமகம்

अग्राविष्णू सजोषसेमा वर्धन्तु वां गिरः ।
द्युम्नैर्वाजेभिरागतम् ॥

கல்பம். अग्राविष्णू என்ற மந்த்ரத்தைச் சொல்லி நான்கு தடவை ஆஜ்யத்தை எடுத்து ஹோமம் செய்துவிட்டுப் பிறகு वाजश्चमे - முதல் பதினொன்ருவது அனுவாகம் முடிய மந்த்ரத்தைச் சொல்லிக் கொண்டு இடைவிடாமல் தாரையாக ஹோமம் செய்யவேண்டும். இங்கு वाजश्चमे - முதல் பதினொன்ருவது அனுவாகம் முடிய ஒரே மந்த்ரம். ஹோமத்தைத் தவிர மற்ற பாராயணம் முதலிய கர்மாக்களில் ஒவ்வொரு அனுவாகத்தையும் ஒவ்வொரு மந்த்ரமாக உபயோகப்படுத்துவதன்பொருட்டு பதினேறு அனுவாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் இந்த अग्राविष्णू என்ற மந்த்ரம்மட்டும் சதுர்க்ருஹீத ஹோமத்திற்காக உச்சரிக்கப்படவேண்டும்.

(பதவுரை) हे अग्राविष्णू - ஏ அக்னி, விஷ்ணு என்ற தேவர்களே! सजोषसा - (நீங்கள் இருவரும்) ஒரே மாதிரி ப்ரீதியுடையவர்களாக இருங்கள். वां - உங்களைப்பற்றிக் கூறப்படும், इमा गिरः - இந்த ஸ்தோத்ரங்களாகிற வார்த்தைகள், वर्धन्तु - விருத்தியடையட்டும். द्युम्नैः - (பவுன், வெள்ளி முதலிய) பொருள்களுடனும், वाजेभिः - அன்னங்களுடனும் (உணவுகளுடனும்) கூடியவர்களாக, आगतम् - வாருங்கள்.

(கருத்துரை) இரு தேவர்களைச் சேர்த்து அழைக்குமிடத்தில் இருவருக்கும் ஒரேமாதிரி ப்ரீதி உண்டாகவேண்டும். ஏற்றத்தாழ்வு இருந்தால் இருவரும் சேர்ந்து பயனை அளிக்க முன்வரமாட்டார்கள் ஆதலால் எங்கள் ஸ்தோத்ரங்களால் இருவருக்கும் ஒரே மாதிரி ப்ரீதி உண்டாகவேண்டுமென்று முதலில் ப்ரார்த்தனை செய்யப்படுகிறது. பிறகு நாங்களும் மிக அதிகமாக உங்களைத் துதிக்க வேண்டும். நீங்களும் இங்குவந்து பொருள்களையும், உணவுகளையும் எங்களுக்கு அளிக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்ளப்படுகிறது.

முதல் அனுவாகம்

वाजश्च मे प्रसवश्च मे .... .... ....शरीराणि च मे ॥१

(ப-ரை) मे - எனக்கு, वाजः - அன்னம் (உணவு), कल्पतां - உண்டாகட்டும்.

(பத்தாவது அனுவாகத்தில் உள்ள कल्पतां என்ற சொல் முன் உள்ள எல்லா சொற்களோடும் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும். அந்த சொல் அந்தந்த இடத்திற்கு ஏற்ற அர்த்தத்தை அளிக்கக் கூடியது. च என்ற சொல் ஸமுச்சயத்தைக் குறிப்பிடுகிறது. அதாவது அன்னம் மேலே கூறப்படும் பொருள்கள் எல்லாம் சேர்ந்து ஸித்திக்கவேண்டும் என்றபடி).

प्रसवः - அனுமதி—உணவு அளிக்கப்படட்டும், அது புசிக்கப்படட்டும் என்றவாறெல்லாம் அனுமதி: (कल्पतां - சென்றவிடமெல்லாம் இம்மாதிரி அனுமதி எனக்குக் கிடைக்கவேண்டும்). प्रयतिः - சுத்தி,

प्रसितिः - அன்னத்தைக்கண்டதும் அதைப் புசிக்க வேண்டுமென்ற விருப்பத்தால் அங்கேயே கட்டுண்டிருத்தல், धीतिः - அன்னத்தை ஏற்றுக்கொள்ளுதல், क्रतुः - அந்த அன்னத்திற்குக் காரணமான யஜ்ஞம், स्वरः - மந்த்ரத்திலுள்ள "உதாத்தம்" முதலியஸ்வரம். श्लोकः - ஸ்தோத்ரம், श्रावः - பலர் கேட்டு ரஸிக்கும்படி சொல்லும் திறமை, श्रुतिः - கேட்டு ரஸிக்கும் திறமை, ज्योतिः - பிரகாசம், सुवः - ஸ்வர்க்கம், प्राणः - ப்ராணவாயு, अपानः - அபானவாயு, व्यानः - வ்யானன் என்ற வாயு, (வெளியிலிருந்து உடலுக்குள் செல்லும்காற்று ப்ராணன். உடலிலிருந்து வெளியில் செல்லும் காற்று அபானன். அவயவங்களின் ஸந்திகளிலிருக்கும் காற்று வ்யானன்) असुः - பொதுவானகாற்று. चित्तं - மனதில் ஏற்படும் அறிவு, अधीतं - அந்த அறிவில் தோன்றும் விஷயம், वाक् - வாகிந்திரியம், मनः - மனம், चक्षुः - கண், श्रोत्रं - காது, दक्षः - ஞானேந்திரியங்களின் திறமை, बलं - கர்மேந்திரியங்களின் திறமை, ओजः - இந்த பலத்திற்கெல்லாம் காரணமான வீர்யம் (எட்டாவது தாது), सहः - எதிரியைத் தாக்கும் திறமை, आयुः - ஆயுள், जरा - கிழத்தன்மை வரை வாழ்தல், आत्मा - சாஸ்த்ரப்ரஸித்தமான பரமாத்மா, तनुः - அழகிய உடல், शर्म - ஸுகம், वर्म - உடலைக்காக்கும் கவசம் முதலியவை, अङ्गानि - பூர்ணமான அவயவங்கள், अस्थानि - அந்தந்த இடத்தில் இருக்கும் எலும்புகள், परूंषि - விரல்முதலியவைகளில் உள்ள கணுக்கள், शरीराणि - உடலில் மற்ற உருப்புகள்.

இவையெல்லாம் எனக்கு நன்றாக அமைய வேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது. (1)

## இரண்டாவது அனுவாகம்

ज्यैष्ठ्यं च मे आधिपत्यं च मे.... .... .... सुगतिश्च मे ॥२

ज्यैष्ठ्यं - எல்லாவற்றிலும் சிறந்து விளங்குதல், आधिपत्यं - தலைவனாக இருத்தல், मन्युः - மனதிலுள்ள கோபம், भामः - வெளிப்படையான குறிகளுடனும் கூடிய கோபம்.

கோபமும் சில ஸந்தர்ப்பங்களில் அவசியமாக இருப்பதால் சரியானஸந்தர்ப்பங்களில் அவை எனக்கு வேண்டுமென்று இங்கு ப்ரார்த்திக்கப்படுகிறது.

अमः - எதிரிகளால் "இவன் இப்படிப்பட்டவன்" என்று அளவிடமுடியாதத்தன்மை, अम्भः - குளிர்ந்த —இனிப்பான ஜலம், जेमा - வெற்றிபெறும் திறமை, महिमा - வெற்றியால் கிட்டிய தனம் முதலியவற்றுடன் கூடியிருத்தல், वरिमा - கௌரவிக்கப்படுதல், प्रथिमा - வீடு, நிலம் முதலியவற்றின் பெருக்கம், वर्ष्मा - பிள்ளை, பேரன் முதலியவர்களின் சிறந்த உடல்கள், द्राघुया - பிள்ளை, பேரன் முதலிய ஸந்ததிகளின் பெருக்கம் वृद्धं - ஏராளமான தனமும், உணவும், वृद्धिः - படிப்பு முதலியவற்றால் பெருமை, सत्यं - உண்மை பேசுதல், श्रद्धा - பரலோகம் உண்டு என்ற நம்பிக்கை, जगत् - ஜங்கமமான பசு முதலியவை, धनं - மற்ற தனம், वशः - அனைவரையும் தனக்கு அதீனமாகச் செய்துகொள்ளுதல், त्विषिः - உடலின் காந்தி, क्रीडा - விளையாடுதல், मोदः - அதனால் உண்டாகும் ஸந்தோஷம், जातं - பிறந்திருக்கும் குழந்தைகள், जनिष्यमाणं - பிறக்கப்போகும் குழந்தைகள்,

सूक्तं - ரிக் ஸமுதாயம், सुकृतं - அதை உச்சரிப்பதால் உண்டாகும் புண்யம், वित्तं - ஸம்பாதிக்கபபட்ட பொருள், वेद्यं - ஸம்பாதிக்கப்படவேண்டிய பொருள், भूतं - முன்பே இருக்கும் நிலம் முதலியவை, भविष्यत् - இனி உண்டாகும் நிலம் முதலியவை, सुगं - அவசியம் செல்லவேண்டிய—பந்துக்கள் நிரம்பிய கிராமம் முதலியவை, सुपथं - திருடர் முதலியவர்களற்ற நல்ல மார்க்கம், ऋद्धं - இதுவரை அனுஷ்டிக்கப்பட்ட கர்மாக்களின் பயன், அல்லது சேர்த்துவைக்கப்பட்டிருக்கும் பொருள், ऋद्धिः - இனி அனுஷ்டிக்கப்படும் ஸத்ரம் என்ற யாகத்தின் பயன், क्लृप्तं - காரியங்களுக்குரிய த்ரவ்யம் क्लृप्तिः - தன் சொந்த ஸாமர்த்யம், मतिः - ஸாமான்ய விஷயங்களைத் தீர்மானித்தல், सुमतिः - மிக துருஹமான ராஜ்யகாரியங்களை யெல்லாம் தீர்மானித்தல். (2)

## மூன்றாவது அனுவாகம்

शं च मे मयश्च मे.... ... .... .... सुदिनं च मे ॥३

शं - ஐஹிகஸுகம், मयः - ஆமுஷ்மிகஸுகம், (பரலோகஸுகம்,) प्रियं - ப்ரீதிக்குக் காரணமான வஸ்து, अनुकामः - மிகவும் விரும்பப்படும் பொருள்.

"ப்ரியம்" என்பதைவிட "அநுகாம:" என்பதில் ப்ரீதி அதிகம் எனக் கொள்ளவேண்டும். இவ்விரு சொற்களும் இவ்வுலகத்தில் உள்ள ப்ரியத்தையே குறிப்பிடுகின்றன.

कामः - ஆமுஷ்மிகஸுகம், ஸ்வர்க்கம் முதலியவை, सौमनसः - மனதிற்கு நிம்மதியையளிக்கும் உறவினர்கள், भद्रं - இவ்வுலகில் மங்களகரமான

